29th October 1958]

THE HON. SRI P. KAKKAN : முன்பு லேபர் டிப்பார்டுமெண்ட் என்றிருந்து செய்துகொண்டிருந்த வேலையைவிடவும் அதிகப்படியான வேலைகளை செய்வதற்குத்தான் ஹரிஜன வெல்பேர் டிப்பார்ட்மெண்ட் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. எங்கு எல்லாம் ஹரிஜன ஆசிரியர்கள் கிடைக்கவில்லையோ அங்கெல்லாம் மற்ற சமூகத்திலுள்ளவர்களை நியமித்து வருகிறார்கள். ஹரிஜனங்களுக்கு வேலை செய்வதற்கு பலர் காத்துக்கொண்டிருக்கிறார்கள். ஆகவே மற்ற சமூகத்தினர்களையும் ஆசிரியர்களாக நியமிக்கப்பட்டு வருகிறது.

SRI K. VINAYAKAM : ஹரிஜனங்களை மாத்திரம்தான் நியமிக்க வேண்டும் என்றிருக்கிற இடத்தில் மற்ற சமூகத்தினர்களையும் நியமித்தால் ஒருவரோடு ஒருவர் பரஸ்பரம் நட்புறவு ஏற்படுவதற்கு வசதியாக இருக்கும். ஆகவே அதை உத்தேசித்து ஜாதி அடிப்படை என்றில்லாமல் ஹரிஜனங்களையும் மற்ற சமூகத்தினர்களையும் சேர்த்து நியமிப்பதற்கு சர்க்கார் முன் வருவார்களா ?

THE HON SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் அவர்கள் சொல்லும் யோசனையை ஏற்றுக்கொள்ள முடியாது. உண்மையாகவே குழந்தைகளுக்கு நல்ல முறையில் யார் கற்பித்துக்கொடுக்கிறார்களோ அவர்களைப் பார்த்து நியமிக்கப்படுகிறதே ஒழிய ஜாதி அடிப்படையில் மாத்திரம் நியமிக்கப்படுவதில்லை.

*Acquisition of house-sites in Reddipalayam*

* 691 Q.—SRI S. M. ANNAMALAI: Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(a) whether any mahazar from the villagers of Reddipalayam, Polur taluk, for acquisition of house-sites has been received recently; and

(b) if so, the action taken thereon?

THE HON. SRI P. KAKKAN (a) Yes, Sir.

(b) The remarks of the Collector of North Arcot have been called for on the requests contained in the mahajar.

SRI S. M. ANNAMALAI : ஸார், இந்த ரெட்டிபாளையம் ஒரு சிறு கிராமம். அங்கு ஒரு வீட்டில் பத்து முதல் பதினைந்து குடும்பங்கள் வசித்து வருகிறார்கள். பக்கத்தில் நில சொந்தக்காரர்கள் இருக்கிறார்கள். பக்கத்தில் கால்வாயும் ஓடுகிறது. இவர்களுக்கு வேண்டிய இடம் கேட்டால் அதுவும் கொடுக்கமாட்டோம் என்கிறார்கள். இதன் பேரில் மூன்று மகஜர்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஆகவே அதன் பேரில் உடனடியாக தக்க நடவடிக்கை எடுக்க சர்க்கார் முன் வருவார்களா ?

THE HON. SRI P. KAKKAN : இதைப்பற்றி நான் முன்பு சொன்னேன். கலெக்டர் அவர்களிடத்தில் இதைப்பற்றி ரிப்போர்ட் கேட்கப்பட்டிருக்கிறது. அது வந்தவுடன் இதில் வேண்டிய முடிவு செய்யப்படும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

*Statistics about Schools and Colleges*

* 692 Q.—SRI N. R. THIAGARAJAN and SRI K. GOPALA KOUNDER : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சென்னை ராஜ்யத்தில் தற்போதிய ஜில்லாக்களில் 1946-ல் ஆரம்பப் பள்ளிகள் எத்தனை, அதில் படித்த மாணவர் தொகை என்ன ?

(ஆ) உயர்நிலைப் பள்ளிகள் எத்தனை, அவைகளில் படித்த மாணவர் தொகை என்ன ?